[4th March 1958

Sri R. KRISHNASAMI NAIDU : இந்த உர உற்பத்தித் தொழிற்சாலையின் உற்பத்தி சக்தி நாளுக்கு எவ்வளவு ?

The Hon. Sri R. VENKATARAMAN : வருஷத்திற்கு 70,000 டன் நெட்ரஜன் (யூரியா) உற்பத்தியாகும்.

*Floods in Palar*

* 154 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state the extent of damages caused to the houses and properties in Vaniyambadi due to floods in Palar in the year 1956?

The Hon. Sri M. A. MANICKAVELU : One hundred and forty-nine huts were either destroyed or damaged and coconut trees on 50 cents were damaged due to the floods in Palar in the year 1956.

Sri A. A. RASHEED : Was any aid given to the flood-affected people and, if so, how much?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir, cash grant to the tune of Rs. 2,615 in the Vaniyambadi town and a cash grant of Rs. 5,130 and a loan of Rs. 7,100 in the outlying villages.

Sri S. NAGARAJA MONIGAR : ஸார், இப்படி பாதிக்கப் பட்டவர்களுக்கு சர்க்கார் உதவி செய்து அவர்களுடைய புனருத்தாரணத் திற்கு உதவும்போது, திரும்ப இதே மாதிரி ஆற்றுக்கு அதிக அருகில் உள்ளவர்களுக்குக் கஷ்டம் நேரிடாமல் சர்க்கார் பார்த்துக் கொள்வார் களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அந்தக் கஷ்டம் இந்த ஆற்றுக்கு நேரிடாது. வெள்ளம் வர வேண்டும் என்றுதான் பிருத்தித்துக் கொண்டிருக்கிறோம்.

Sri T. KARIA GOUNDER : இந்தக் கேள்விக்குப் பதி லளிக்கும்போது நகரத்தைப்பற்றி மந்திரி அவர்கள் பதில் சொன்னார்க ளென்று நினைக்கிறேன். கிராமப் புரத்தில் நஷ்டம் அடைந்தவர்களுக்கு நிவாரணம் அளிக்கப்பட்டதா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : நான் அதையும் சொன்னேன். முதலில் சொன்னது வாணியம்பாடி ஊரைப் பற்றியது. இரண்டாவது சொன்னது கிராமங்களைப் பற்றியது. ஐயாயிரத்துச் சில்லரை கேஷ் கிராண்ட், கடன் 7,000 இரண்டும் அந்தக் கிராமங்களைப் பொருத்தது.

Sri M. JAGANNATHAN : திரும்ப இந்தப் பாலாற்றிலே வெள்ளம் வந்தால் அந்த வெள்ளத்தைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்திருக்கிறது ?

Mr. SPEAKER : The Hon. Minister has stated that he welcomes such floods.

*Hospitals in the Tirunelveli district*

* 158 *Q.*—Sri M. K. SOMASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of Government, Local Fund and Private hospitals in the Tirunelveli district;

4th March 1958]

(*b*) the number of Medical Officers serving in these Government Hospitals; and

(*c*) the number among them belonging to Backward Classes and Scheduled Castes?

THE HON. SRI M. A. MANCKAVELU :

| | | |
|---|---|---|
| (*a*) | Government Hospitals ... ... ... ... | 15 |
| | Local Fund Hospitals ... ... ... ... | 38 |
| | Private Hospitals ... ... ... ... ... | 9 |
| (*b*) | Thirty-one. | |
| (*c*) | Backward Classes ... ... ... ... ... | 8 |
| | Scheduled Castes ... ... ... ... ... | Nil. |

SRI M. K. SOMASUNDARAM : ஸார், தாலூகா ஹெட் க்வார்ட்டர்ஸில் உள்ள லோகல் பண்டு ஆஸ்பத்திரிகளை சர்க்கார் எடுத்து நடத்த முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தாலூகா தலை நகரத்திலுள்ள ஆஸ்பத்திரிகளை கவர்ன்மெண்டு எடுத்துக் கொண்டு வருகிறார்கள். இந்த வருஷம் ஆறு, ஏழு எடுத்துக்கொண்டார்கள். இன்னும் ஐந்து, ஆறை எடுத்துக் கொண்டால் தாலூகா தலைநகரத்திலுள்ள ஆஸ்பத்திரிகள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு விடுவார்கள். பிற்பாடு மற்ற இடத்தில் எடுத்துக்கொள்வதைப்பற்றி யோசிக்கலாம்.

SRI M. S. SELVARAJAN : திருநெல்வேலி ஜில்லா போர்டின் பொருளாதார தளர் நிலையை உணர்ந்து, திருச்செந்தூரின் முக்கியத்துவத்தைக் கருதி, திருச்செந்தூர் தாலூகா தலைநரகத்திலுள்ள ஆஸ்பத்திரியை சர்க்கார் இவ்வருடமே எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : திருச்செந்தூர் ஆஸ்பத்திரியை இந்த வருஷம் எடுத்துக் கொள்வதாக இருக்கிறது. அது கனம் அங்கத்தினருக்குத் தெரிந்திருக்குமென்று நினைக்கிறேன்.

SRI G. GOMATHISANKARA DIKSHITAR : அம்பாசமுத்திரம் ஹெட்க்வார்ட்டர்ஸ் ஹாஸ்பிடல் மிகவும் நெருங்கியிருப்பதால், அத்துடன் தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டப்படி வைத்திய வசதி செய்து கொடுக்கப்பட்டு வந்திருப்பதால், அதை இன்னும் அதிகமாக அபிவிருத்தி செய்ய கனம் மந்திரி அவர்கள் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இன்னும் அதிமாக அபிவிருத்தி செய்யும் விஷயம் அவ்வப்போது எந்தெந்த இடங்களில் செய்யலாம் என்பதைப் பார்த்து, அதுவும் செய்யப்பட்டு வருகிறது.

SRI A. R. SUBBIAH MUDALIAR : மொத்தம் 62 ஆஸ்பத்திரிகள் இருப்பதாகச் சொன்னார்கள். அதில் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரியில் எத்தனை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை, டிஸ்ட்ரிக்ட் போர்ட் ஆஸ்பத்திரியில் எத்தனை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை, பிரைவேட் ஆஸ்பத்திரிகளில் எத்தனை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்ற விவரங்களைச் சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லாததைப்பற்றியில்லை. எத்தனை ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன, அதில் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி எவ்வளவு, லோகல் பண்டு ஆஸ்பத்திரி எவ்வளவு என்ற தகவல்தான் சேகரிக்கப்பட்டது.

[4th March 1958

**Sri T. K. SUBBIAH :** உடையார்பாளையம் மிகவும் பிற்போக்கான பிரதேசம். ஜமீந்தார் ஒரு ஆஸ்பத்திரி நடத்தி வந்தார். அது வெகு காலமாக மூடப்பட்டிருக்கிறது. அதை அரசாங்கம் எடுத்து நடத்த முன் வருமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இது திருநெல்வேலி ஜில்லாவைப் பற்றியது. திருச்சி ஜில்லா விஷயமாகத் தனிக் கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறேன்.

*Hospital at Palayamkottai*

* 159 *Q.*—Sri M. K. SOMASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal to construct quarters for nurses near the hospital to be constructed at Palayamkottai, Tirunelveli district; and

(*b*) if so, when the work will be taken up?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Orders have been issued for the construction of a new Headquarters Hospital at Palayamkottai at an estimated cost of Rs. 17·5 lakhs. The estimate provides for the construction of Nurses' Quarters also.

(*b*) The work will be taken up immediately after the detailed plans and estimates are ready.

**Sri M. K. SOMASUNDARAM :** இந்த விடுதியில் கல்யாணமான பெண்கள் குடும்பத்துடன் வாழ வசதி செய்யப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இது புதிதாகக் கட்டும் கட்டடம். அந்தக் கட்டடத்தில் இதைப் பற்றி அப்போது யோசனை பண்ணுவார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

*Government Women and Children Hospital, Vannarpet*

* 163 *Q.*—Sri M. K. SOMASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to raise the strength for the Midwifery course for nurses in the Government Women and Children Hospital, Vannarpet, Tirunelveli district?

The Hon. Sri M. A. MANICKAVELU : There is no Midwifery course for Nurses in the Government Women and Children Hospital, Vannarpet, Tirunelveli district. However, there is a training centre for Midwifery pupils in Tamil in the Hospital. There is a proposal to raise the present strength of the pupil Maternity Assistants in that Hospital from 14 to 26. This is under consideration.

**Sri M. S. SELVARAJAN :** ஸார், திருநெல்வேலி ஜில்லா தலைமை ஆஸ்பத்திரியில் ஆண்களுக்கு இருக்கும் ஆஸ்பத்திரியில் க்ஷயரோகத்திற்கு சிகிச்சை செய்ய வசதி இருப்பதுபோல், வண்ணாரப்பேட்டையில் பெண்களுக்கு க்ஷயரோக சிகிச்சைக்கு வசதி செய்யவேண்டுமென்ற முறையீடு இருந்தது. அதைப்பற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?